பாகவதர், ராஜகுமாரி,
கிருஷ்ணன், மதுரம் நடித்த

# ஹரிதாஸ்



கிடைக்குமிடம் :

C. K. ஆருமுகம்,

புஸ்தக வியாபாரம்,

பெரியகடை வீதி, கோயமுத்தூர்.



# ஹரிதாஸ்

**ஹரிதாஸ் :** (ஹிந்தி ட்யூன்)

வாழ்விலோர் திரு நாள் - இன்றே
மான் விழி மடவார் கும்பல் - வீதிகளெங்கும்
கண் ஜாடை செய்யும் பெண் இவள் பார்வை
காமன் மலர்க்கணை தானே (வாழ்வில்)
விரைவொடு செலும் என் மனமிவளோடு
தெருவென நினையாதேனே
முகிலோ மயிலின் தோகையிதாமோ
முல்லை நகைக்குழலாளே
வில்லெனும் புருவ வாளே (வாழ்வில்)
மாதரின்றிப் பூதலமீது
மங்களம் இன்பமுமேது
எந்த ஊரோ நானறியாத
யௌவன ஸுந்தரி யாரோ
எங்கும் இவள்போல் மங்கைகளையே
கண்டதில்லையே பாரில்
மாதரின்றிப் பூதலமீது
மங்களம் இன்பமுமேது (வாழ்வில்)

ஜமீந்தார் : நடனம் ஆடவேண்டும் நீ (நட)
அழகு நயனம் கைவழிய நடனம் ஆடவேண்டும்
சாரதா: ஆடணும் என்றால் பாடணும் தாளம் போடணும்
தமிழ்பாடத் தெரியாவிட்டா லெழுந்து ஓடணும்
சாரதா: கோழி உம் [நட
ஜமீந்தார்: கொக்கு
சாரதா: இல்லே குருவி
ஜமீந்தார்: குயிலு
சாரதா: போல பாடணும் (தமிழ்)
பாடத் தெரியாவிட்டா லெழுந்தோடணும் (நட)

**ஹரிதாஸ்: ராகம்-சாருகேஸி** **தாளம்-ஆதி**

பல்லவி

மன்மத லீலையை வென்றாருண்டோ
**என் மேல் உனக்கேனோ-பாராமுகம்** (மன்மதன்)



அநுபல்லவி

நின் மதி வதனமும் நீள் விழியும் கண்டு
என் மதி மயங்கினேன் மூன்று உலகிலும் (மன்மதன்)

சரணம்

என்னுடனே நீ பேசினால் வாய்
முத்துதிர்ந்து விடுமோ-உனை
எந்நேரமும் நினைந்துருகு மென்னிடம்
வந்தால் மெனக் கெடுமோ
உன்னை நயந்து நான்வேண்டியு மோர்முத்தம்
தந்தால் குறைந்திடுமோ
ஒருபிழையறியா என்மனம் மலர்க்கணை
பாய்ந்து அல்லல்படுமோ-மனங்கவர் (மனமதன்)

**ராகம்-ஸிந்துபைரவி** **தாளம்-ஆதி**

ஹரிதாஸ்: தொட்டதெற்கெல்லாம் தப்பெடுத்தா
லென்ன சொல்வேன் பெண்மயிலே
லக்ஷ்மீ: தப்பெடுக்கும் தொழில் எங்களுக்கில்லை
ஹரிதாஸ்: கோபமுமேன் வரபாமினியே
லக்ஷ்மீ: பேசுவதே கோபமென்றால் என்ன செய்வேன்
ஹரிதாஸ்: சாந்தமிதோ மடமானே
ஸத்குண சாந்தமிதோ மடமானே
லக்ஷ்மீ: போதமே பரிஹாசம்
ஹரிதாஸ்: இனிபோதுமே பிடிவாதம்
(இருவரும்) நிஜ அன்பே பேரின்பம்

**லக்ஷ்மீ: ராகம்-பிலஹரி** **தாளம்-ஆதி**

கதிரவன் உதயம் கண்டு கமலங்கள் முகம் மலரும்
நதிதடங்கள் நீராடும் நங்கையர் குடங்களுடன்
கல கல வெனும் பலவித ஒலியுடனே
ஸகல உலகும் மிகு குதூஹலமுடனே
கூடுமே-பாமனருள் புகழ்ந்து
பர்டுமே-பரிவுடன் திசை திசை
ஓடுமே-மகிழ்ந்து துள்ளி விளை
யாடுமே-இளங் கன்றின்குரல்கேட்டு
கனிந்து வரும் பசு உன் போலே-அன்பு
சுரந்த மனிதரைக் காணேனே (கதிரவன்)

**லக்ஷ்மி: ராகம்-சுத்த தன்யாசி** **தாளம்-ஆதி**

பல்லவி

கண்ணுவா மணி வண்ணுவா



சரணம்

வெண்ணெய் பால் திருடி உண்டவா-உயர்
உண்ணேர் முனிவரை ஆண்டவா-யசோதை
கண்ணே என்னிரு கண்ணே பங்கஜக் (கண்ணு)
மாதவன் உன் மஹிமை அறியார் அயல்
விலை
மாதரை விரும்பிக் கெட்டழிவார் உன்னை
மனிதனென்பார் மாட்டிடையனென்பார்-மலர்(கண்ணு)

லக்ஷ்மீ (ஹிந்தி ட்யூன்)

எனது மனம் துள்ளி விளையாடுதே
என் மனம்போலினி எல்லாம் செய்திடுவேன்
இன்புறப்பாடி விளையாடுவேன் இன்றே
மாடி மனையுடன் எல்லாம் இந்நேரம்
மண் பொருளாடை மணி பணி ஹாரம்
தேடிய செல்வம் என் அதிகாரம்
ஈடெனக் காரினிமேல் (எனது)
எனதெஜமான் எந்நாளும் நான்
கிழித்த கோட்டை தாண்டிமாட்டார்
கிழங்கள் பெரும் தொந்தரவில்லை
ராணி நானினிமேல்

ராகம்-பைரவி டுயெட்-தாளம்-ஆதி

ரம்பா: எந்நாளும் இந்த இன்பங்குறை
யாதொன்றுறுதி சொல்லும்
ஸ்வாமி....எனக்கெந்நாளும்........
ஹரிதாஸ்: ஏனோ இந்த ஸந்தேஹம்
உனக்கேனோ இந்த ஸந்தேஹம்
என்னிடம்
இன்பக் களஞ்சியமே
எந்தன் இன்பக்களஞ்சியமே

ராகம்—மாண்டு தாளம்—திஸ்ரம்

ஹரிதாஸ்: உலகில் எவரும் நிகரில்லையே
உலகில் எவரும் நிகரில்லையே
ரம்பா: உல்லாசமாய் உலாவுவோம்
(இருவரும்) உள மகிழ்வுடனே

ராகம்-ஹுஸேனி தாளம்-ஆதி

ரம்பா: போதும் வேண்டாம் விளையாட்டு
ஆடை புதிது ,னைந்தது மேனிகுளிர்ந்தது (போ)



ஹரிதாஸ்: முடியாது உன்னை விடமாட்டேன்
ரம்பா: முடியாது உம்மை விடமாட்டேன்
தோழிகள்: முடியாது உம்மை விட மாட்டோம்

ராகம்-ஹம்ஸத்வனி தாளம்-ஆதி

ரம்பா: மயில்களழகாய்
ஹரிதாஸ்: பயிலும் நடமே
ரம்பா: குயிலினிசையே கு கூ கு கூ
ஹரிதாஸ்: வான் நிறை மதியும்
ரம்பா: பால் நிற நிலவு
ஹரிதாஸ்: பூங்காவன அழகும்
(இருவரும்) கலந்தே (வான்நிறை)

ரம்பா ஹிந்தி ட்யூன்

உங்களை என் கண்ணாலே காண ஆசை கொண்டேனே
எனதுள்ளூறு (ம்) காதலினால் நொந்தேன் கண்டேனே
எந்தன் கண்ணாளா எந்துரையே வாரும் உட்காரும்
புண்ணிய நான் பண்ணின நாள்
வாழ்விலின்னாள் - ஆகுமே
என்மேல் பாராமுகமா ஏழை என்மேல் வர்மமா
மன்னவா இன்பமும் தாரும்
குறை தீரும் எந்தனைப்பாரும்
எனதுள்ளமும் வாடினேன்
மையலாலே பல நாளாய் [உங்களை]

ஹரிதாஸ் ஹிந்தி ட்யூன்

மாமுனி நாதர் கருணையிலே
மறைந்ததே இருள் மாயை
பாமரனாய் உயர் மானிடஜன்ம மடைந்தும் பாழானேன்
அல்ப போகமே சதமென நம்பி
அலைந்து திரிந்தேனே - வீணே - அலைந்து திரிந்தேனே
அன்னை தந்தையே தெய்வ மெனு - மிவ்
உண்மை யுணர்ந்தேனே அன்னையே தந்தையே

ஹரிதாஸ்:—விருத்தம் ராகம்-யதுகுலகாம்போதி

என் உடல் தனிலொரு ஈ மொய்த்தபோதுங்கள்
கண்ணில் முள்தைத்தாற்போல் இடிந்து
உன் உடல் நோய் கண் டிரவொடு பகலும்
கண் உறங்கா - துடலிளைத்தும்



இன்னமுதூட்டி இன்பத்தாலாட்டி
என்னை ஆளாக்கிய பெருமைக்கு
என்னிடம் இயற்கையில் உங்கள்
உள்ளுருகும் அன்பினுக்கு ஒரு கைம்மாறேது

**ராகம்—அடாணா**

என் உயர் தவப்பயன் அம்மையே அப்பா
இம்மையில் எனது கண் கண்ட
என் அருட் கடவு ளம்மையே அப்பா
எனக்கொரு நற்கதி யுண்டோ
என் அரும் நிதியாம் அம்மையே அப்பா
என் பிழை பொறுத்தருள்வீரோ
என் உயிர் துணையாம் அம்மையே அப்பா
எங்கு சென்றுங்களைக் காண்பேன்
அம்மையப்பா உங்கள் அன்பே மறந்தேன்
அறிவில்லாமலே நன்றி மறந்தேன்
தாயே தந்தையே என்
அருமைத் தாயே தந்தையே

**ஹரிதாஸ் :**

அன்னையும் தந்தையும் தானே பாரில்
அண்டசராசரம் கண் கண்ட தெய்வம் [அன்னை]
தாயினும் கோயிலிங் கேது
ஈன்ற தந்தை சொல் மிக்கதோர் மந்திரமேது
சேயின் கடன் அன்னை தொண்டு
புண்ணிய தீர்த்தமும் மூர்த்திஸ்தலமும் இதில் உண்டு
தாயுடன் தந்தையின் பாதம் [அன்னை
என்றும் தலைவணங்காதவன் நாள் தவறாமல்
கோயிலில் சென்று என்ன காண்பான்
நந்தகோபாலன் வேண்டும் வரம் தருவானே
பொன்னுடன் ஒண்பொருள் பூமி
பெண்டிர் புத்திதரும் புகழ் இத்தரை வாழ்வு
அன்னை பிதாவின்றி ஏது
மரம் ஆயின் விதையின்றி காய் கனி ஏது

**ஜமீந்தார், சாரதா**

கவலையை தருவது-காரிகை செயலே
கவலையற்றார் கண்கள்-கலங்கும் வகையிலே
[ஐயோ அப்படியே நம்பிட்டாரே முருகா
முருகா-முருகா-முருகா எனக்
கொருதுணையில்லை முருகா
[நான் சொல்றதைக் கேளுங்க கேக்கவா



உன் மொழியை-என்னிரண்டு காது கேக்காதே
உடல்பெருத்த மனிதர்களும் பொய்தான் புகன்றிடுவாரோ
போவெளியே
என்ன செய்வேன் எங்கே செல்லுவேன் நான் எதுமறியேன்
பசப்புக்காரி என்னையா ஏமாத்துறே
மறைவாக இவ்விடத்தில் நடந்த சேதியாலே மாதுனை நான
விஷயம் புரிஞ்சாச்சு [றிவேன
தாசு உண்மையை பேசு
ஸ்வாமி நான் உம்மையடைய என்ன தவம் செய்தேன்
சொற்புத்தியை கேட்கலாமோ
இந்தா இனி என்ன சொன்னாலும் உன்னை
சொப்பனத்தாலும் நினையேன் சுப்ரமண்ய சுவாமி அவரறிய
அர்பத்தனமாய் நடந்தாய் அறிவிழந்தாய் அற்பனிவனை நினை
இல்லேண்ணு சொல்றே [ந்தாய்
வதனமே சொல்லுதே பெண்ணே
தெரியுதே கண்ணாடிபோலே
பளிங்கு கண்ணாடிபோல் (வதன)

**ரம்பா :** ராகம்—முகாரி

காதகி கிராதகி நான்
கல் மனது கொண்டு குல
மாதர்களை வயிறெரியச் செய்தேன் (காதகி)
ஸாது ஹரிதாஸைக் கொடும்
வஞ்சனை புரிந்து—பர
தேசியாய் போகச் சதிசெய்தேன்
ஏன் பிறந்தேன் பாவி
ஏன் பிறந்தேன்

**லக்ஷ்மீ :** ராகம்-மாயாமாளவகௌளை தாளம்—ஆதி

பல்லவி

எனதுயிர் நாதன் ஹ்ருதயமும் நொந்தே
எனைப்பிரிந்தார்... இனி
என்ன என் வாழ்வு

தொகையறா

ஸீதை நளாயினி - ஸாவித்ரிமுதல்
சிறந்த ஸதிகள் பிறந்த
மேதினி தனிலேன் பாதகி நான் பிறந்தேன்
வினையின் பயனடைந்தேன்
ஆதரவாய் ஒருநாளும் அவருடன்
அன்பு கலந்திலேனே அவர்



பாதமலரைப் பணிந்தறியேன் இன்று
பரிதாபங் கொண்டேன்

அநுபல்லவி

பனி மதியின்றி நிலாவொளி உண்டோ
பதி அன்பின்றி மெய் இன்பமுமுண்டோ (எனதுயிர்)

ஹரிதாஸ்: ராகம்—நவரோஸ் தாளம்—ஆதி

கிருஷ்ணா....முகுந்தா முராரே
கிருஷ்ணா....முகுந்தா முராரே (ஜெய)
கருணா ஸாகர கமலாநாயக
கனகாம்பரதாரி - கோபாலா (கிருஷ்ணா)
காளிய மர்தன கம்ஸநிஷூதன
கமலாயத நயன கோபாலா (கிருஷ்ணா)
குடில குந்தனம் குவலய தளநீலம்
மதுர முரளிரவ லோலம்
கோடி மதன லாவண்யம் கோபீ
புண்யம் பஜாமி கோபாலம்
கோபிஜன மனமோஹன் வ்யாபக
குவலய தள நீல....கோபாலா (கிருஷ்ணா)

ஹரிதாஸ்: ராகம்—ப்யாகடை தாளம்—ரூபகம்

பல்லவி

நிஜமா இது நிஜமா
நீ அடிமைக்கும் காக்ஷிதந்தது (நிஜமா)

அநுபல்லவி

அஜனொடு கைலாஸபதி
அறியாத ஆதிமூலமே (நிஜமா)

சரணம்

நாமமொரு முறை சொன்ன என்
நாக்குத்தந்த பாக்கியமோ
நாயடிமையின் தாய் தந்தையர்
நல் அனுக்ரஹமோ
ஓம் நமோ நாராயணா ஓம் நமோ நாராயணா
ஓம் நமோ நாராயணா ஓம் நமோ நாராயணா (நிஜமா)

சுபம்.

Tagore Press, Washermanpet, Madras. C. 6000

